# திருப்புகழமிர்தம்






ஆசிரியர்
**கிருபானந்தவாரி**

சௌமிய

வயலி நகரியி லருள் பெற மயில் மிசை
யுதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

கார்த்திகை

## சந்தா நேயர்களுக்கு

திருப்புகழமிர்த இதழ்கள் ஒவ்வொரு ஆங்கில மாதமும் 16ந் தேதி (அன்று விடுமுறையானல் அடுத்துவரும் விடுமுறையில்லாத நாளில்) தபாலில் சேர்க்கப்படும். ஆகவே சந்தாத் தொகைகள் எந்தத் தேதியில் கிடைத்தாலும் அடுத்துவரும் 16ந் தேதி யளவில்தான் திருப்புகழமிர்த இதழ்கள் அனுப்பி வைக்கப்படும்.

பத்திரிகை எந்த மாதமாவது கிடைக்காவிட்டால் அந்த (ஆங்கில) மாதம் 25ந் தேதிவரை பொறுத்துப் பார்த்துவிட்டு அதற்குமேல் எமக்கு எழுதவேண்டும். அதற்கு முன் எழுதப்படும் கடிதங்கள் கவனிக்கப்பட மாட்டா. ஒரு மாதத்துக்கு மேற்பட்டுத் தெரிவிப்போர் கிரயம் செலுத்திப் பெறவேண்டும்.

பிரதிகள் மாதாமாதம் ஒழுங்காகக் கிடைக்கப்பெருத அன்பர்கள் அந்தந்த வட்ட தபால் மேற்பார்வையாளர்களுக்குப் புகார் எழுதியனுப்பி ஒழுங்கு செய்து கொள்ள வேண்டும். இவ்விடம் தபாலில் சேர்ப்பது வரைதான் எமது பொறுப்பு. தபாலில் தவறும் பிரதிகளுக்கு நாம் பொறுப்பேற்க இயலாது.

பதிலை எதிர்பார்ப்போர் பதிலுக்கு உண்டான கார்டு அல்லது கவர், ஸ்டாம்பு இவைகளையும் சேர்த்தனுப்ப வேண்டும்.

மானேஜர், திருப்புகழமிர்தம்.

## திருப்புகழமிர்தம் ஆண்டுச் சந்தா

| | |
|---|---|
| இந்தியா, இலங்கை | ரூ. 3—50 |
| மற்ற நாடுகள் | ரூ. 5—50 |

---

உ

# புதிய வெளியீடுகள்

**1. கட்டுரைக் கனிகள்**

பல ஆண்டுகளாக நமது திருப்புகழமிர்தத்தில் வெளிவந்துள்ள முக்கியமான 67 கட்டுரைகளின் தொகுப்பு. மிகவும் குறைந்த விலையில் வெளியிடப்பட்டுள்ளது. 420 பக்கங்கள் விலை ரூ. 3—00. பதிவு தபாற் செலவு ரூ. 1—10.

**2. கற்புக் கனிகள்—முதற் புத்தகம்**

கற்பு என்னும் தலைப்பின்கீழ் வெளிவந்த சிறுகதைகள் 21 கொண்ட தொகுப்பு விலை ரூ. 1—00. தபாற் செலவு 0—20.

**3. கற்புக் கனிகள்—இரண்டாம் புத்தகம்**

கற்புக் கதைகள் 16 கொண்ட தொகுப்பு விலை ரூ. 1—00. தபாற் செலவு 0—20

**4. கற்புக்கனிகள்—மூன்ருவது புத்தகம் (11 சிறுகதைகள்)**

ரூபாய் 1—00. தபாற் செலவு 0—20.

ரிஜிஸ்டர் தபாற் கட்டணம் 0—75 வேறு.

உ

ஓம் குஹாய நம ।



# திருப்புகழமிர்தம்



"இருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருவ்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"



| மலர் 34 | சௌமிய ஆடு— கார்த்திகை மீ<br>நவம்பர் 1969 | இதழ் 8 |
|---|---|---|



## திருப்புகழ்

### திருவருணை

ஆனைவரிக் கோடிளகிர்ப் பாரமுலைச் சாரசைபட்
டாடைமறைத் தாடுமலர்க் குழலார்கள்
ஆரவடத் தோடலையப் பேசிநகைத் தாசைபொருட்
டாரையு மெத் தாகமயக் கிடுமோகர்

சோனைமழைப் பாரவிழித் தோகைமயிற் சாதியர்கைத்
தூதுவிடுத் தேபொருளைப் பறிமாதர்
தோதகமுற் றேழ்நரகிற் சேருமழற் காயனையுட்
சோதியொளிப் பாதமளித் தருள்வாயே

தானதனத் தீதிமிலைப் பேரிகைகொட் டாசமலைச்
சாயகடற் சூரைவதைத் திடுவோனே
தாளவியற் சோதிநிறக் காலினெழக் கோலியெடுத்
தாபரம்வைத் தாடுபவர்க் கொருசேயே

தேனிரசக் கோவையிதழ்ப் பூவைகுறப் பாவைதனத்
தேயுருகிச் சேருமணிக் கதிர்வேலா
சீரருணைக் கோபுரமுற் றனபுனத் தோகையுமெய்த்
தேவமகட் கோர்கருணைப் பெருமாளே.

*1494—1*

## பதவுரை

தானதனத்தீ = தானத்தனத்தீ என்ற ஒலியுடன், திமிலை - திமிலை யென்ற பறையும், பேரிகை கொட்டா = முரசு வாத்தியமும் ஒலி செய்ய, சம் மலை சாய = நன்ருகக் கிரவுஞ்சகிரி சாய்ந்து அழியவும், கடல் சூரை வதைத்திடுவோனே = கடலில் நின்ற சூரபன்மனை வதை செய்தவரே! தாள இயல் = தாளத்தின் இலக்கண விளக்கமானது, சோதி நிற காலின் எழ = ஒளி பொருந்திய தனது திருவடியில் ஒலித்து உண்டாகுமாறு, கோலி எடுத்து = வளைத்து ஒரு திருவடியை யெடுத்து, தாபரம் வைத்து = ஒரு திருவடியை நிலத்தில் வைத்து, ஆடுபவர்க்கு = திரு நடனம் புரிகின்ற சிவபெருமானுக்கு, ஒரு சேயே = ஒப்பற்ற புதல்வரே! தேன் இரசம் - தேனின் ரசம் போல் இனிக்கும், கோவை இதழ் = கொவ்வைப் பழம் போன்ற வாயிதழையுடைய, பூவை = நாகண வாய்ப் பறவை போன்ற, குற பாவை தனத்தே உருகி = வள்ளி நாயகியின் தனங்களை நாடி உள்ளம் உருகி, சேரும் = தழுவிய, மணி கதிர்வேலா = அழகும் ஒளியும் உடைய வேலாயுதக் கடவுளே! சீர் அருணை கோபுரம் உற்று = சிறந்த திருவண்ணுமலைக் கோபுரத்தில் அமர்ந்து, ஆன புனம் தோகையும் = வளமையான தினைப்புனத்தின் மயிலாம் வள்ளியம்மைக்கும், மெய் தேவ மகட்கு = மெய்ம்மையான தெய்வ மகளாம் தேவசேனைக்கும், ஓர் கருணை = ஒப்பற்ற கருணை காட்டிய, பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! ஆனை வரி கோடு = ஆனையின் கோடுகள் உள்ள தந்தத்தையும், இளநீர் பார முலை சார் அசை = இளநீரையும் நிகர்த்த பாரமுள்ள கொங்கைகளைச் சார்ந்து அசைகின்ற, பட்டு ஆடை மறைத்து = பட்டாடையால் உடம்பை மறைத்து, ஆடும் = நடனம் புரிகின்ற, மலர் குழலார்கள் = மலர் சூடிய கூந்தலையுடைய பொதுமாதர்கள், ஆரவடம் தோடு அசைய = முத்துமாலையும் தோடும் அசைய, பேசி = இனிது உரையாடியும், நகைத்து = புன்னகை செய்தும், ஆசை பொருட்டு = பொன்னை வேண்டி, ஆரையும் எத்து ஆக = எவரையும் வஞ்சனையாக, மயக்கிடு மாதர் = மயங்கவைக்கும் காமிகள், சோனை மழை பாரளக = விடா மழை போன்ற அளகபாரக் கூந்தலும், விழி = கண்களும் உடைய, தோகை மயில் சாதியர் = கலாப மயில் போன்றகுலத்தினர், கை தூது விடுத்தே = தம் கை வசமாயுள்ள ஆண்களைத் தூதராக அனுப்பி, பொருளை பறிமாதர் = பொருள்களைப் பறிக்கின்ற விலை மாதர்களின், தோதகம் உற்று = வஞ்சகத்தில் அகப்பட்டு, ஏழ் நரகில் சேரும் = ஏழு நரகங்களில் சேர்கின்ற, அழல் காயனை = நெருப்புக்கு இரையாகக்கூடிய உடல் எடுத்த அடியேனை, சோதி உள் ஒளி = சோதியுட் சோதியாய் விளங்கும், பாதம் அளித்து அருள்வாயே = உமது திருவடியைத் தந்து அருள்புரிவீராக.

## பொழிப்புரை

தானதனத்தீ என்ற ஒலியுடன் திமிலை யென்ற பறை வாத்தியமும், முரசு வாத்தியமும் ஒலிக்க, கிரவுஞ்சமலை நன்கு அடியுடன் அழியவும், கடலில் நின்ற சூரபன்மனை வதைத்தவரே! தாளத்தின் இலக்கணங்கள் ஒளி பொருந்திய தமது திருவடியின் மூலம் உண்டாகுமாறு, ஒரு திருவடியை வளைத்து எடுத்தும், மற்றொரு திருவடியைப் பூமியில் ஊன்றியும் திரு நடனம் புரிகின்ற நடராஜ மூர்த்தியின் ஒப்பற்ற புதல்வரே! தேன்போன்ற இனிமையும் கொவ்வைப்பழம் போன்ற சிவந்த வாயிதழும் கொண்ட—நாகண வாய்ப்புள் போன்ற வள்ளி பிராட்டியின் தனத்தின்மீது உள்ளம்வைத்து உருகி அவரைத் தழுவிய, அழகும் ஒளியும் உடைய வேலாயுதரே! சிறந்த திருவண்ணாமலைக் கோபுரத்தில் அமர்ந்து, வளமையான தினைப்புன மயிலாம் வள்ளி நாயகிக்கும், மெய்ம்மை பூண்ட தேவசேனைக்குங் கருணை கூர்ந்த பெருமிதம் உடையவரே! யானையின் கோடுள்ள கொம்பையும், இளநீரையும் ஒத்துப் பாரமுள்ள கொங்கையைச் சார்ந்து அசைகின்ற பட்டாடையால் உடம்பை மறைத்து நடனம்புரிகின்ற மலர் சூடிய கூந்தலுடையவர்களும், முத்துமாலையும் தோடும் அசையுமாறு உரையாடியும் புன்னகை புரிந்தும், பொன் பொருட்டு எவரையும் மயக்குவிக்கும் காமிகளும், சோனைமழை போன்ற அடர்ந்த கூந்தலும் கண்களும் உடைய மயில்போன்ற குலத்தவரும், தம்பால் உள்ளவரைத் தூதாக அனுப்பிப் பொருளைக் கவர்கின்றவர்களுமாகிய பொது மாதர்களின் வஞ்சனையில் அகப்பட்டு, ஏழு நரகில் சேர்கின்ற அடியேனை—நெருப்பில் இரையாகும் உடம்பெடுத்த என்னை சோதியுட் சோதியாய் விளங்கும் உமது திருவடியைத் தந்து அருள்புரிவீராக.

## விரிவுரை

**ஆனைவரிக் கோடு:—**

யானையின் இரு தந்தங்களும் மாதர்களின் தனங்கட்கு உவமையாகக் கூறப்படும்.

**இளநிர்ப் பாரமுலை:—**

பெண்களின் தனங்கட்கு இளநீரும் உவமையாகச் சொல்லப்படும்.

**பட்டாடை மறைத்தாடும்:—**

உடம்பைப் பட்டாடையால் மறைத்துப் பொதுமகளிர் தாளஜதியுடன் வகைவகையாக நடனம் புரிவார்கள்.

ஆசை பொருட்டாரையு மெத்தாக.

ஆசை—பொன்.

எத்துதல்—ஏமாற்றுதல்.

பொன்னின் பொருட்டு எத்துணைச் சாமர்த்திய சாலிகளை யும் வஞ்சனையால் மயக்குவிப்பவர்கள்.

**சோனை மழைப்பாரம்:—**

பாரம்—அளகபாரக் கூந்தல்; கூந்தல் சோனை மழைபோல் நீண்டுளது.

"மழை யொக்கும் வடித்த கூந்தல்" —கம்பர்.

**தூது விடுத்தே பொருளைப் பறிமாதர்:—**

திறமையுள்ள தூதரை யேவி ஆடவர்பால் உள்ள பொருளைக் கவரும் தந்திரம் உள்ளவர்கள் பொதுமகளிர்.

**தோதகம்:—**

தோதகம்—வஞ்சனை.

மாதர்களின் வஞ்சனை வலையில் விழுபவர்.

**அழற் காயனை:—**

தீயில் எரியும் உடம்பை யுடையவன்.

**உட்சோதி யொளிப்பாதம்:—**

சோதியுட் சோதியாய் ஒளி செய்வது இறைவனுடைய திருவடி.

அது நூறுகோடி சூரியப் பிரகாசமானது.

"உததியிடை கடவுமரகத வருண குலதுரக
உபலளித கனகரத சதகோடி சூரியர்கள்
உதயமென அதிகவித கலப கக மயிலின்மிசை
உகமுடிவின் இருளகல ஒருசோதி வீசுவதும்"
—சீர்பாத வகுப்பு.

**சமலை சாய:—**

சம்மலை என்ற சொல் சமலையென வந்தது. சம்—நன்றாக மலை—கிரவுஞ்சமலை, சாய—சாய்ந்துவிழ முருகவேள் வேலை யேவினர்.

**கடற்சூரை வதைத்திடுவோனே:—**

சூரபன்மன் கடலில் ஒளிந்தான். பின்னர் கடலில் எஃகு மாமரமாக நின்று உலகை வருத்தினன். அவனைக் கடலின் நடுவில் முருகவேள் வதைத்தருளினா.

"பார்முதிர் பனிக்கடல் கலங்க உள்புக்குச்
சூர்முதல் தடிந்த சுடரிலை நெடுவேல்"

—திருமுருகாற்றுப்படை.

தாளவியற் சோதிநிறக் காலினெழ:—

நடராசப் பெருமானுடைய திருவடியிலிருந்து பலஜதிகளுடன் கூடிய தாள இலக்கணங்கள் தோன்றுகின்றன.

கோலி யெடுத்து:—

அம்பலவாணர் தமது இடது திருவடியை வளைத்துத் தூக்கி நடனம் புரிகின்றார். அதனால் அத்திருவடி குஞ்சித பாதம் எனப்படும். அது சஞ்சித வினைகளையகற்ற வல்லது.

தாபரம் வைத்தாடுபவர்:—

தாபரம்—பூமி.

வலது திருவடியை நிலத்தின்மீது ஊன்றி அழகிய ஆனந்த நடனம் புரிகின்றார். இறைவனுடைய அருட்கூத்து ஆக்கல், அளித்தல், ஒடுக்கல், மறைத்தல், அருளல் என்ற ஐம்பெருந் தொழில்களையும் புரியும் அற்புதசக்தியுடையது.

"கற்பனை கடந்த சோதி கருணையே உருவமாகி
அற்புதக் கோலம்நீடி அருமறைச் சிரத்தின் மேலாம்
சிற்பர வியோம மாகும் திருச்சிற் றம்பலத்து நின்று
பொற்புடன் நடஞ் செய்கின்ற பூங்கழல் போற்றி போற்றி"

என்று சேக்கிழார் பெருமான் இந்த நடனத்தைப் போற்றி செய்கின்றார்.

தேனிரசக்கோவை யிதழ்ப்பூவை குறப்பாவை:—

பூவை—நாகணவாய்ப் பறவை. வள்ளி பிராட்டி நாகணவாய்ப் பறவை போன்றவர். அவருடைய மொழி தேனின் மதுரம் போன்றது.

"பாகு கனிமொழி மாது குறமகள்"

—(பாதிமதிநதி) திருப்புகழ்.

"தேனென்று பாகென்று உவமிக் கொணா
மொழித் தெய்வ வள்ளிக் கோன்"

—கந்தரலங்காரம்.

தனத்தே யுருகி:—

வள்ளிபிராட்டியின் தனங்கள் இரண்டும் பரஞானத்தையும் அபர ஞானத்தையும் குறிக்கும். ஞானபண்டிதனும் முருகவேள் வள்ளியின்பால் உள்ள பரஞான அபர ஞானங்களைக் கண்டு உள்ளம் உருகுகின்றார் எனவுணர்க.

இதனைச் சேக்கிழார் பெருமான் "உவமையிலாக் கலை ஞானம்" என்கின்றார்.

**சீரருணைக் கோபுர முற்று:—**

சிறப்புமிக்க திருவண்ணாமலையில் வல்லாள ராஜன் புதுக்கிய திருக்கோபுரத்தின் வடபால் முருகன் எழுந்தருளியிருக்கின்றார்.

"அடலருணைத் திருக் கோபுரத்தே யந்த வாயிலுக்கு
வடவருகிற் சென்று கண்டு கொண்டேன்" —கந்தரலங்காரம்.

"அருணைநெடுந்தடங் கோபுரத்தமர்ந்த
அறுமுகப் பெருமாளே" —(தமரகுரங்) திருப்புகழ்.

**புனத்தோ கையுமெய்த் தேவம கட்கோர் கருணைப் பெருமாளே:—**

வள்ளி நாயகிக்கும் தெய்வ யானைக்கும் அவர்கள் செய்த தவத்தின் காரணமாக முருகன் கருணைபுரிந்து ஆட் கொண்டருளினார்.

## கருத்துரை

அண்ணாமலை யண்ணலே! அடியேன் நரகிடை விழாவண்ணம் உமது சோதிமயமாம் பாதமலரைத் தந்தருள்.

## திருப்புகழ்

இடருக்கிடராகிய கொடுமைக் கணைமேல்வரு
மிறுதிச் சிறுகால்வரு மதனாலே
இயலைத் தருகானக முயலைத் தருமேனியி
லெரியைத் தருமாமதி நிலவாலே

தொடரக் கொடுவாதையி லடையக் கரைமேலலை
தொலையத் தனிவீசிய கடலாலே
துணையற் றணிபூமல ரணையிற் றனியேனுயிர்
துவளத் தகுமோ துயர் தொலையாதோ

வடபொன் குலமேருவின் முடுகிப் பொருசூரனை
மடியச் சுடஏவிய வடிவேலா
மறவக் குலமாமொரு குறமெய்த் திருமாமகள்
மகிழப் புனமேவிய மயில்வீரா

அடரப் படர்கேதகை மடலிற் றழைசேர்வய
லருணைத் திருவீதியி லுறைவோனே
அவனித் திருமாதொடு சிவனுக் கிமையாவிழி
அமரர்க் கரசாகிய பெருமாளே.

## பதவுரை

வட பொன் குல மேருவின் = வடக்கேயுள்ள சிறந்த பொன் மேருமலை போல், முடுகி பொரு சூரனை = வேகமாகச் சென்று போர் செய்த சூரபன்மனை, மடிய சுட = மாய்ந்து தீய்ந்து போம்படி, ஏவிய வடி வேலா = செலுத்திய கூரிய வேலாயுதத்தை யுடையவரே! மறவ குலம் ஆம் = வேடர்குலத்தவளாகிய, ஒரு குற = ஒப்பற்ற குறக்குலத்தில் வளர்ந்த, மெய் திரு மாமகள் மகிழ = மெய்ம்மை விளங்கும் இலக்குமிதேவியின் சிறந்த புதல்வியாகிய வள்ளி நாயகி மகிழுமாறு, புனம் மேவிய = தினைப்புனத்துக்கு விரும்பிச் சென்ற, மயில் வீரா = மயில்மீதுவரும் வீரமூர்த்தியே! அடர படர் = நெருக்கமாக வளர்ந்துள்ள, கேதகை மடலின் தழைசேர் வயல் = தாழையின் மடலின் தழைகள் சேர்ந்துள்ள வயல்களையுடைய, அருணை திரு வீதியில் உறைவோனே = திருவண்ணுமலைத் திரு வீதியில் எழுந்தருளியிருப்பவரே! அவனி = பூதலத்துக்கும், திருமாதொடு = இலக்குமிக்கும், சிவனுக்கு = சிவபெருமானுக்கும், இமையாவிழி அமரர்க்கு = இமையாத கண்களையுடைய தேவர்கட்கும், அரசு ஆகிய = தலைவராக விளங்கும், பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! இடருக்கு இடர் ஆகிய = துன்பத்துக்குமேல் துன்பந்தருவதான, கொடுமை கணை மேல் வரும் = மன்மதபாணங்களின் மேலே வந்து, இறுதி சிறுகால் வரும் அதனுலே = முடிவைச் செய்கின்ற தென்றல் காற்று வீசுவதனுலும், இயலை தரும் = தகுதியையுடையதும், கானக முயலை தரு மேனியில் = காட்டில் முயல் போன்ற களங்கத்தையுடையதுமான உருவத்தில், எரியை தரு மா மதி நிலவாலே = நெருப்பினை வீசும் அழகிய சந்திர ஒளியாலும், தொடர கொடு வாதையில் அடைய = தொடர்ந்து கொடிய வேதனையை நான் அடையுமாறு, கரைமேல் அலை தொலைய தனி வீசிய கடலாலும் = கரைமீது அலைகள் பட்டழிய ஒப்பற்ற விதத்தில் வீசுகின்ற கடலினுலும், துணை அற்று = துணை ஒருவருமின்றி, அணிபூ அணையில் = அழகிய மலர்ப்படுக்கையில், தனியேன் உயிர் துவள தகுமோ = தனிமையேனுகிய என் உயிர் வாடுதல் தகுமோ? துயர் தொலையாதோ = என் துன்பம் ஒழியாதோ?

## பொழிப்புரை

வடக்கேயுள்ள பொன் மேருகிரிபோல் வேகமாகப் போருக்கு வந்து போர்புரிந்த சூரபன்மன் வெந்தழியுமாறு செலுத்திய கூர்மையான வேலாயுதக் கடவுளே! வீரமும் கொடுமையும் நிறைந்த குலமாகிய குறவர் குலத்திலே வளர்ந்த இலக்குமிதேவியின் மகளாகிய வள்ளி பிராட்டியார் மகிழுமாறு அவர் இருந்த தினைப்புனத்துக்கு விரும்பிச் சென்ற மயில் வீரரே! நெருங்கி வளர்ந்துள்ள தாழையின் மடல்களா

கிய இலைகள் சேர்ந்துள்ள வயல்கள் சூழ்ந்த திருவண்ணு மலையில் திருவீதியில் எழுந்தருளியிருப்பவரே! பூமிக்கும் இலக்குமிக்கும், சிவபெருமானுக்கும் தலைவராக விளங்கும் பெருமிதமுடையவரே! துன்பத்துக்குமேல் துன்பஞ் செய்கின்ற மன்மத பாணத்தின்மீது வந்து முடிவைச் செய்கின்ற தென்றல் காற்றினுலும், முயல்போன்ற களங்கமும் தகுதியும் கொண்டு நெருப்பை வீசுகின்ற சந்திரனுலும், தொடர்ந்து வந்து எனக்கு வேதனையைத் தந்து கரைமேல் வீசுகின்ற அலைகளை யுடைய கடலாலும், வேறு துணையின்றி தனிமையில் மலர்ப்படுக்கையில் நான் வருந்தி உயிர் துயர முறுதல் தகுமோ? என் து. பரம் ஒழியாதோ?

## விரிவுரை

இத்திருப்புகழ் அகப்பொருளில் அமைந்தது. முருகவேளாகிய நாயகனையடையும் பக்குவப்பட்ட ஆன்மா தனிமையில் வருந்துவதாகத் தெரிவிக்கின்றது.

**இடருக் கிடராகிய கொடுமைக்கணை:—**

கணவனை விரும்பும் ஒரு பெண்ணுக்கு மென்மேலும் துன்பத்தைத்தர மன்மதன் பூங்கணை எடுத்துத் தொடுத்து விடுப்பான்.

**இறுதிச் சிறுகால் வருமதனுலே:—**

இறுதியைச் செய்யும் அத்துணைத் துன்பத்தைத் தரும் தென்றல்.

சிறுகால்—இளங்காற்று.

பரவையாரை விரும்பிய சுந்தரர் தென்றல் காற்றை நோக்கி "ஏ தமிழ்த் தென்றலே! நீ பிறந்தது அகத்தியர் வாழுகின்றதும் சிவபிரானுக்குரியதுமான பொதியமலை. நீ வளர்ந்தது செந்தமிழ் நாட்டில் செந்தழல் வீசித் துயரத்தைத் தருகின்றுயே? நீ இந்தக் கொடுமையை எங்கே கற்றுக்கொண்டாய்?" என்று கூறுகின்றுர்.

பிறந்த தெங்கள் பிரான் மலயத்திடை
சிறந்தணைந்தது தெய்வநீர் நாட்டினில்
புறம்பணைத்தடம் பொங்கழல் வீசிட
மறம்பயின்ற தெங்கோ தமிழ் மாருதம்?

**முயலைத் தருமேனி:—**

சந்திரமண்டலத்தில் முயல் வடிவில் தோன்றும் களங்கம்.

**எரியைத் தருமாமதி நிலவாலே:—**

பிரிந்திருக்குந் தலைவிக்கும்—தலைவனுக்கும் குளிர்ந்த நிலா நெருப்பைப்போல் வெம்மையைச் செய்யும்.

ஊரைச் சுடுமோ உலகந் தனைச்சுடுமோ
சூரைச் சுடுமோ அறியேனே—நேரே
பொருப்பு வட்டமானகிற் பூங்கொடியீர் இந்த
நெருப்பு வட்ட மானநிலா.

**அலைதொலையத் தனி வீசிய கடலாலே:**

காமுகர்க்குக் கடலோசை இடியோசைபோல இடர் கொடுக்கும்.

"எழுகடலின் முரசினிசை வேயோசை விடையின்மணி
இசைகுறுகி இருசெவியி னூராச முறுவதென"
—(இரவியென) திருப்புகழ்

**துணையற்றணி பூமலரணையில்:—**

துணையின்றி நாயகி தனிமையாகப் பூவணையில் புரண்டு துயரமுறுகின்றாள்.

**தனியேனுயிர் துவளத் தகுமோ :—**

"முருகா! தனிமையில் என் உயிர் வருந்துவது முறையாகுமா? இத்துயரம் என்னை விட்டு விலக நீ வந்து என்னை மருவுவாயாக" என்று வேண்டுகின்றாள்.

**கேதகை மடலிற்றழை சேர் வயல்:—**

கேதகை—தாழை. தாழையின் மடலுடன் கூடிய இலைகள் உதிர்ந்து வயலில் உரமாகி வளஞ் செய்கின்றன.

**அவனித் திருமாதொடு சிவனுக் கிமையாவிழி அமரர்க்கரசாகிய:—**

பூவுலகுக்கும், இலக்குமி தேவிக்கும் சிவபெருமானுக்கும், இமையா விழியுடைய இமையவர்க்குந் தலைவன் முருகன்.

## கருத்துரை

அருணையுறை அரசே! உன்னை விரும்பித் தவிக்குந் தலைவியாகிய என்னைத் தழுவித் துயரைக் களைந்தருள்.

# கற்பு

## ரமி

ரமி, சிறு வயதிலிருந்தே வாயாடி. அந்தக் குடும்பத்தில் அவள் ஒரே பெண். அதனுல் செல்லமாக வளர்ந்தாள். யாருக்கும் அஞ்சாத அடங்காப் பிடாரியாக உலாவிஞள். எதையுந்துணிந்து செய்வாள். பள்ளிக்குச் சென்ருள். ஆசிரியர் அவளுக்குக் கிள்ளுகீரையாகத்தான் இருந்தது. அறிவு கூர்மையாக இருந்தபடியால் கல்வியில் முன்னேற்றம் அடைந்தாள். ஆசிரியரை இடக்குமடக்காக ஏதாவது கேள்வி கேட்டு அவரையே திணர வைப்பாள்.

“ஆசிரியரே! முருகப் பெருமானுக்கு ஆறுமுகம் இருக்கின்றதே· பின்புறம் முகம் உள்ளதே? அவர் எப்படிப் படுப்பார். படுத்தால் முகம் அடிபடுமே?” என்பாள்.

“அம்மா! முருகன் ஞானமே வடிவானவர். அவருக்குப் படுக்க வேண்டிய அவசியம் கிடையாது. நாம் உண்ணுகின்ருேம்; உறங்குகின்ருேம். இறைவன் ஞானத் திருமேனி யுடையவர். அவருக்கு உண்பதும் உறங்குவதும் கிடையாது” என்று விளக்கங் கொடுப்பார்.

ஒருநாள் தன் தந்தையாரைப் பார்த்து “அப்பா! உனக்குக் கல்யாணம் ஆகின்றபோது நான் எங்கிருந்தேன்?” என்று கேட்டாள்·

அவர் “அம்மா! நீ பிறக்கவில்லே” என்ருர்.

“ஓ! நான் பிறப்பதற்கு முன்னுலேயே நீ அம்மாவைக் கல்யாணம் பண்ணிக்கிட்டாயா? நான் எங்கிருந்து பிறந்தேன். ஏன் பிறந்தேன்? பிறப்பதற்கு முந்தி நான் எப்படி யிருந்தேன்?” என்று அடுக்கடுக்காகக் கேள்விகளேக் கேட்டாள்.

ரமி நல்ல அழகுடன் வளர்ந்தாள். அவள் உடம்பு வாழைத் தண்டுபோல் பளபள என்று இருந்தது. இருண்டு சுருண்ட கூந்தலும், உடம்புடன் ஒட்டிக் கொண்டிருக்கும் ரவிக்கையும், நெற்றியில் அழகிய குங்குமப் பொட்டும், காதில் சிறிய தோடும், கழுத்தில் மெல்லிய தங்கச் சங்கிலியும் அவளே அழகுபடுத்தின. நெற்றியில் கூந்தலின் சிறு கரிய ரோமங்கள் அசைந்து ஆடிய காட்சி கண்டவர் களே மயக்கியது. கரிய விழியால், இனிய மொழியால் அவள் யாரையும் பரவசப்படுத்தி விடுவாள்.

உரிய காலத்தில் திருமணம் நடந்தது. சந்திரவாணன் ரமியின் கரத்தைப் பற்றினன். கல்யாணம் கோலாகலமாக இருந்தது. ஆடல் கச்சேரியும் பாடல் அரங்கும் விகடக் கச்சேரியும், நல்விருந்தும், சொல் விருந்தும் நடைபெற்றன.

சந்திரவாணன் தன் மனைவி ரமியுடன் புறப்பட்டுத் தன் சொந்த ஊரான சங்கபுரம் வந்து சேர்ந்தான். தந்தையார் ரமிக்கு நிரம்ப சீதனங்களை வழங்கி வழியனுப்பினர்.

ரமியும் சந்திரவாணனும் புதுக்குடித்தனம் நடத்தினர்கள். புதுத் தம்பதிகளுக்குள்ளே கேலியுங் கிண்டலும் சிரிப்பும் மகிழ்ச்சியும் தவழ்ந்தன.

சந்திரவாணன் நல்ல தரும சிந்தையுள்ளவன். அடியவர்க்கு அன்னமும் ஆடையுந் தன்னல் முடிந்தவரை தந்து உபசரிப்பான். தான் சாப்பிடும்போது நாலு பேர் உடன் இருந்து உண்ணவேண்டும் என்று ஆசைப்படுவான். தன் வீட்டுக்கு வந்தவர்களைச் சாப்பிட்டு விட்டுத்தான் போக வேண்டும் என்று பிடிவாதம் பிடிப்பான். ஏதாவது கொடுத்து வந்தவர்களை உண்பித்து உவகையுறுவான்.

ரமி இந்தப் போக்கைக் கண்டு வெறுத்தாள். கணவன் கருத்தை மறுத்தாள். "ஏனுங்க இப்படி வாங்க! நான் சொல்வதைக் கேளுங்க. இது என்ன வீடா? தரும சத்திரமா? ஓயாமடமா? வந்தவனும் போகின்றவனும் இங்கே சாப்பிடுவதற்கு இது என்ன அறச்சாலையா? வந்தவர்களிடம் வாய்குளிரப் பேசி அனுப்புங்கள். வந்தவர்கட்கு உபசாரம் முன் கட்டுடன் முடியட்டும். பின் கட்டுக்கு அழைத்து வராதீர்கள். அவரவர்கள் தங்கள் தங்கள் வீட்டில் போய்ச் சாப்பிடட்டும். அதுதான் முறை. திடீர் திடீர் என்று நாலு பேரை அழைத்து வந்து விடுகின்றீர்கள். இங்கென்ன சமயலுக்கு ஆள் இருக்கின்றார்களா? என் உடம்பு என்ன வெண்கலத்தால் அமைந்ததா? இதுவும் மாம்ச உடம்புதானே. அவரவர்கள் உழைத்து உண்ணவேண்டும். கண்ட கண்ட பரதேசிக்குச் சோறு போட்டுச் சோம்பேறிப் பட்டாளத்தை வளர்க்கின்றீர்கள். இந்தப் போக்கு எனக்குப் பிடிக்கவில்லை" என்று கணவனிடம் வாது செய்தாள்.

சந்திரவாணன் "ரமீ! நான் சொல்வதைக் கவனமாகக் கேள், மண்ணிலே இட்டதுதான் ஒன்றுக்கு ஆயிரமாக விளைகின்றது. நம் வயிற்றில் இட்டது மலமாகக் கழிகின்றது. அன்றியும் முற்றாத கருக்காய் நெல்லைக் குத்தித்தான் தின்பார்கள். நன்றாக முற்றிய நெல்லைத் தான் விதை நெல்லாக வயலில் தூவுவார்கள். அதுபோல் உயர்ந்த வுணவுகளை அடியார்கட்குப் படைக்க வேண்டும். எளிய வுணவுகளை நாம் உண்ண வேண்டும். இதுதான் நம் பெரியார்கள் காட்டிய வழி.

நமது நாட்டில் அடியார்கட்கு அன்னம் படைப்பது வழிவழியாக வந்த மரபு. வந்தவர்கட்கு எல்லாம் படைத்துக் கொண்டே யிருந்தால் ஒரு சிவஞானி வருவார். ஒரு சிவஞானி யுண்டால் அது மூவுலகங்களும் உண்டதாகும், இன்றிருப்பார் நாளையிருப்பதில்லை. உலகமும் செல்வமும் உடம்பும் அநித்தியம். கொடுத்ததுதான் நம்கூட வரும். இவையெல்லாம் ஒன்றுந் தெரியாமல் நீ வாய்க்கு வந்ததை உளராதே'' என்றான் சந்திரவாணன்.

ரமி, "தங்கள் சொல்லை நான் தட்டுகின்றேன் என்று நீங்கள் எண்ண வேண்டாம். காலத்துக்கு ஏற்றபடி நமது கருத்தையும் மாற்றிக் கொள்ள வேண்டும். இந்தக் காலத்தில் சிவஞானிகளாவது கத்தரிக் காயாவது? கடாமாட்டுப் பாலைப் பார்த்தாலும் பார்க்கலாம், ஞானிகளைப் பார்க்க முடியாது. வரட்டு வேதாந்தம் பேசிக் கொண்டு காலத்தை வீணுக்கக் கூடாது. போலிச் சாமியார்களை எல்லாம் கும்பிட்டபடியால்தான் சேதிநாட்டு மன்னர் மெய்ப் பொருள் நாயனார் மாண்டுவிட்டார். அதிகமாக அறஞ் செய்தபடியால் மகாபலிச் சக்கரவர்த்தி அதோ கதியானான். ஆதலால் இந்த வீட்டில் தாங்கள் தயவுசெய்து கண்டவர்கட்கெல்லாம் சோறு போடுகின்ற வேலையை வைத்துக் கொள்ளாதீர்கள். உங்கள் நண்பர்களையோ, உறவினர்களையோ அழைத்து வாருங்கள். விதம் விதமாகச் சமைத்துப் போடுவேன். சாப்பிட்டுச் சாப்பிட்டு வயிற்றை வளர்த்து நாட்டுக்கும் வீட்டுக்கும் நலஞ் செய்யாத தடிச் சாமியார்களை மட்டும் அழைத்துக் கொண்டு வராதீர்கள்'' என்றாள்.

சந்திரவாணன் என்ன செய்வான். பாவம்! அவன் மனம் படாத பாடுபட்டது. மனைவி ஒத்துழைக்கவில்லையானால் எவ்வாறு அன்ன தானஞ் செய்ய முடியும்? மிகமிக வருந்தினான். அவன் மனம் எப்போதும் அடியார்கட்கு அன்னம் இடுவதையே விரும்பியது. "மதி சூடும் அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல் மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன்'' என்ற சேக்கிழார் அமுதவாக்கை நம்பி நடப்பவன். இல்லறமாகிய வண்டிக்கு மனைவி ஒரு எருது, கணவன் ஒரு எருது. ஒரு எருது ஒத்துழைக்கவில்லையானால் வண்டி எப்படி ஓடும்? மிகுந்த வேதனைப் பட்டான், எங்காவது அடியார்கள் பசியென்றால் ஓட்டலுக்கு அழைத்துப் போய் பசியாற்றுவான். அது அவனுக்குப் போதிய திருப்தியைத் தரவில்லை. சாதுக்களை நம்ம வீட்டுக்கு அழைத்து வந்து பாதபூஜை செய்து அன்னம் படைத்து உபசரித்து உள்ளம் குளிர வைப்பதல்லவா இல்லறத்தானுடைய முதற் கடமை. விருந்தோம்பல்தானே இல்லறத்தின் பயன். ஐந்து பெரும் வேள்விகளில் அதிதிகட்கு அன்னம் பாலிப்பதுதானே சிறந்த வேள்வி. அநித்யம் என்பார்களே? நம்ம துர்அதிர்ஷ்டம் இப்படியான ஒரு மனைவி வந்து சேர்ந்தாளே'' என்று எண்ணி எண்ணி ஏங்குவான்.

ஒருநாள் பகல் பன்னிரண்டு மணி. அந்த ஊர் சிவாலயத்துக்குப் போயிருந்தான். அங்கே நெற்றியில் திருநீறும், திருமார்பில் உருத்தி ராட்ச கண்டிகையும், சிந்தையில் ஐந்தெழுத்தும் கண்ணில் கருணை யும், திருமுகத்தில் சிவஞான ஒளியும் உடைய ஒரு சிவனடியாரைப் பார்த்தான். அவர் திருவடியில் வீழ்ந்தான்.

"பூதலம் புகழும் மாதவ மணியே! தாங்கள் எங்கிருந்து வரு கின்றீர்?" என்றான்.

"அப்பனே! நான் யாத்திரிகன். பசுபதிநாதர், கேதாரநாதர், பத்திரிநாதர், துங்கநாதர், விசுவநாதர், வைத்தியநாதர் முதலிய ஜோதிர் லிங்கங்களையெல்லாம் தரிசித்து விட்டு, தெற்கே உள்ள ஜோதிர் லிங்கமான ராமநாதரைத் தரிசிக்கும் பொருட்டு சென்று கொண்டிருக்கின்றேன்" என்றார்.

"சுவாமி! அடியேன் இல்லத்துக்கு எழுந்தருளி சிறிது அமுது செய் தருள வேண்டும்" என்று வேண்டிக் கொண்டான். அடிகளாரும் அதற்கு இசைந்தருளினார். சந்திரவாணன் அருந்தவ முனிவரைத் தன் வீட்டுக்கு அழைத்துப் போய், பாதபூஜை செய்தான். தெருப் பக்கமுள்ள அறையில் அமரச் செய்தான். மனைவியிடம் போய், "ரமீ! இன்று நமக்குப் பெரிய அதிர்ஷ்டம். வடக்கே காணக் கிடையாத ஜோதிர் லிங்கங்களை யெல்லாம் தெரிசித்த மகான் வந்திருக்கின்றார். அவரை உணவு கொடுத்து உபசரித்தால் நமது ஏழேழு பிறப்புக்களும் ஈடேறும். ஏதாவது ஒன்றை நல்ல சுவையுள்ளதாகச் செய். நான் போய் நெய் வாங்கி வருகின்றேன்" என்று கூறிவிட்டு, நெய் ஏனத்தை எடுத்துக்கொண்டு கடைவீதிக்குச் சென்றான்.

ரமி தனக்குள் சிந்தித்தாள். நமது கணவன் ஏமாந்த சோணகிரி. இவருக்கு இன்னும் இந்தப் பரதேசிப் பித்து போகவில்லை. இதற்கு ஒரு முடிவு கட்ட வேண்டும்" என்று எண்ணி நல்லதொரு புது வழி யைக் கண்டுபிடித்தாள்.

பளிச்சென்று எழுந்தாள். மிளகாய் அரைக்கின்ற குழவிக் கல்லை நடுவீட்டில் வைத்தாள். அதற்கு மஞ்சள் குங்குமம் இட்டு, பத்ர புஷ் பம் சாத்தினாள். ஒரு சிறு பட்டுத்துணியைச் சுற்றினாள். அதன் அருகில் அமர்ந்து விம்மி விம்மி அழ ஆரம்பித்தாள். பிறகு வாய்விட்டு அழு தாள்.

தனியறையில் அமர்ந்திருந்த தவமுனிவர் வெளியே வந்து அழு கின்ற அம்மையைப் பார்த்தார். அவர் மனம் இரக்கமுற்றது.

"அம்மா! ஏன் அழுகின்றாய்? இந்த குழவிக்கல்லை வைத்து அழுகின்ற காரணம் யாது? உனக்கு உள்ள கவலையைச் சொல். என்னால் முடியுமானால் உதவி செய்வேன்" என்றார்.

ரமி, சுவாமிகள் திருவடியில் விழுந்தாள். "குருநாதா! நீங்கள் என் தகப்பனாரைப் போல் காட்சி தருகின்றீர்கள். எனக்கு உம்மைப் பார்த்தால் மிகுந்த பரிதாபமாக இருக்கின்றது. இந்த வீட்டுக்காரர் ஒரு புதுமையானவர். எங்குமில்லாத விபரீத புத்தியுள்ளவர். தங்களைப் போன்ற சாதுக்கள் வந்தால், அழைத்து வந்து சாப்பாடு போட்டு, சாப்பிட்டு முடியும்போது இந்தக் குழவிக்கல்லை யெடுத்து திடீர் என்று அவர் தலையில் போட்டு மண்டையை உடைப்பார். அந்த மண்டை ஓட்டை எடுத்து ஏதோ ஒரு மை செய்வார். இப்படி பல சாதுக்களை வதைத்திருக்கின்றார். இன்று உங்கள் தலைக்கு ஆபத்து வந்துள்ளது. இதை நினைத்து என்னால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. எத்தனையோ நல்ல தலங்கட்குப் போய் வந்தீர்கள். இன்று உங்கள் ஆயுள் முடியப் போகின்றதே என்றுதான் அழுகின்றேன்" என்றாள். இதனைக் கேட்ட சாது நடுங்கினார்.

"அம்மா! உனக்குக் கோடி புண்ணியம். நான் தெரியாமல் இங்கு வந்தேன். நீ மகராசியாக இருப்பாய்" என்று கூறிவிட்டுப் பையை எடுத்துக் கொண்டு பிடித்தார் ஓட்டம்.

சந்திரவாணன் நெய்யை வாங்கி வந்தான். அதற்குள் ரமி குழவிக் கல்லைக் கழுவி அம்மியின் மீது வைத்துவிட்டாள்.

"ரமீ' சுவாமிகள் எங்கே?"

"அவர் மகாமோசமான ஆள். இங்கே வாருங்கள். நீங்கள் போனவுடன் உள்ளே வந்து இந்த குழவிக்கல்லைக் கேட்டார். நான் சுவாமி! இது எங்கள் மாமியார் காலத்தது இதைத் தரமுடியாது. புதிதாக வாங்கித் தருகின்றேன் என்றேன். அவர் கோபித்துக் கொண்டு போய்விட்டார்" என்றாள்.

"அடி பாவி! கேவலம் இந்தக் குழவிக்கல்லுக்காக கிடைத்தற்கரிய பரமஞானியை இழந்து விட்டனையே? நான் ஓடிப்போய் அழைத்து வருகின்றேன்" என்று குழவிக்கல்லைத் தலையிலே வைத்துக் கொண்டு ஓடினான். வெகு வேகமாகச் சென்றான். ஊரைத் தாண்டி சென்று கொண்டிருக்கின்ற ஞானியைக் கண்டான். "சுவாமீ! சுவாமி!" என்று அழைத்தான். குழவிக்கல்லைத் தலையிலே வைத்து வருவதை அவர் பார்த்தார். அந்த வீட்டம்மாள் சொன்னது உண்மை. இவன் நமது தலையைக் குழவிக்கல்லால் உடைக்கத்தான்

வருகின்றான் என்று எண்ணி மிகவும் வேகமாக ஓடினர். ஒரு கல் தடுக்கி விழுந்துவிட்டார். சந்திரவாணன் அவரை நெருங்கினான்.

"அப்பா! வேண்டாம். குழவிக்கல்லை என் தலையில் போடாதே. உனக்குக் கோடி புண்ணியம் உண்டு. நான் சாது. என்னைக் கொல் லாதே" என்றார்.

இந்த வார்த்தைகளைக் கேட்டுச் சந்திரவாணன் நடுங்கிவிட்டான்.

"சுவாமீ! தங்களை நான் கொல்ல வந்தேனா? ஐயோ! தாங்கள் தான் என் தெய்வம். நான் சாதுக்களை நடமாடும் கடவுளராக வணங்குபவன். தாங்கள் என்னைத் தவறாக ஏன் நினைத்துக் கொண் டீர்" என்று கூறி அவர் கால்மீது விழுந்து, "இந்த குழவிக்கல்லை நீர் விரும்பிக் கேட்டீராமே? எடுத்துக் கொள்ளுங்கள். உணவு செய்ய வாருங்கள்" என்று அழுது தொழுது வேண்டினான்.

"அப்பா! நான் இந்தக் குழவிக்கல்லை விரும்பவில்லை. எனக்கு ஏன் குழவிக் கல்.

"மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க்கு உடம்பு மிகை."

என்று நான் இருப்பவன். இந்த உடம்பே எனக்கு மிகை. பற்றற் றவன். எனக்கு ஏன் இக்கல். நீ சாதுக்களை அழைத்து வந்து இந்தக் குழவிக் கல்லால் அவர்கள் தலையை உடைப்பது வழக்கம் என்று உன் மனைவி கூறி யழுதாளே?" என்றார்.

சந்திரவாணனுக்குத் தன் மனைவி செய்த சூது தெரிய வந்தது.

"ஆகா! இவள் மனைவியா? குழவிக்கல்லால் சாதுக்களைக் கொல்லு பவன் என்று கூறி இவரை விரட்டியிருக்கின்றாள். சாதுவை விரட்ட வில்லை. என் குடும்பப் பாசத்தை விரட்டினாள். இனி நமக்கு வாழ்க் கையேன்?" என்று கருதினான்.

"சுவாமி! அடியேன் தங்கள் சீடன், இனி அடியேனைத் தங்கள் பணியாளனாக ஏற்றுக் கொள்ளும்" என்று பணிந்தான். அவருடன் கூடி யாத்திரைக்குப் புறப்பட்டான்.

சந்திரவாணன் அவருடன் எல்லாந் துறந்து சென்றான்.

ரமி கணவனை யிழந்து தன் வாழ்வையுமிழந்து கண்கலுழ்ந் தாள்.

உ

முருகா



## சாந்தி பருவம்

### மோக்ஷ தர்மம்

(168-ஆம் பக்கத் தொடர்ச்சி)

தருமர் "பெருந்தகையே! இந்த கண்ணபிரானுடைய பெருமையை அறிய விரும்புகின்றேன்" என்ருர்.

பீஷ்மர் "தருமநந்தனு! இதுபற்றி நான் உனக்குக் கூறுவேன். தேவ ரிஷியாகிய நாரதர் ஒரு சமயம் உலகமெல்லாம் உலாவி தீர்த்த யாத்திரை செய்தார். இமயமலைச் சாரலை யடைந்தார். அங்கு தாமரையும் நீலோத்பலமும் மலர்ந்த அழகிய ஒரு குளத்தைக் கண்டார். அக்குளக் கரையில், எல்லா அணிகலங்களை யணிந்தவளும் ஒளி மயமானவளுமான ஒரு கன்னிகையைக் கண்டார். அவள் "நாரதா!" என்று அழைத்தாள். நாரதர் வியப்புடன் அவள் அருகில் சென்ருர். அவள் புன்னகை செய்தாள். அப்போது அவள் முகத்திலிருந்து, இரத்தினப் புள்ளிகள் உள்ள மேனியுடன், தலையில் ஒரு மணியைத் தாங்கிய ஒரு உருவம் தோன்றியது. திரும்பவும் அதே போன்ற உருவமும், மற்று ஒரு உருவமும் தோன்றின. அந்த மூன்று உருவங்களும் அவளை வலஞ் செய்து நின்றன.

நாரதர் "அம்மா! நீர் யார்? அறிய விரும்புகின்றேன்; உம்மிடம் தோன்றிய இவைகள் எவை?" என்று வினவினர்.

கன்னிகை "பிரம்ம ரிஷியே! நான் சாவித்திரிதேவி. என்னிடம் தோன்றியவைகள் ருக்வேதம், யஜுர்வேதம், சாமவேதம் என்பவை. அவைகளின் தலையில் இருந்த மணி யாகத்தின் பயன்" என்று கூறி மறைந்துவிட்டாள்.

நாரதர் அற்புதமடைந்து அங்கு புலன்களை அடக்கி 100 ஆண்டுகள் தவஞ் செய்தார். அப்போது அவர் முன் நாராயண மூர்த்தி தோன்றி காட்சியளித்தார். நீலவண்ணமும், தாமரையனைய திருவடிகளும், ஸ்ரீவத்சம் என்ற மறுவுள்ள மார்பும், கருணை பொழியுங் கண்களும், மணிமகுடமும் விளங்க, கோடி சந்திர ஒளியுடன் அவர்

முனிகணங்கள் துதிசெய்ய விளங்கினுர். நாரதர் அவரைப் பயபக்தி யுடன் பல முறை வணங்கித் துதிசெய்தார். "நாரத! அந்த உருவங் களாகிய வேதங்களின் முடியில் இருந்த மணிதான் நான். உனக்கு மங்களம் உண்டாகட்டும்" என்று கூறி மறைந்தருளினுர்.

"தரும! இந்தக் கோவிந்தருடைய பெருமை பேசுந் தரமன்று. அஸிதரும் தேவலரும் மார்க்கண்டேயரும் வால்மீகியும் இப்பெரு மானைப் புகழ்ந்து போற்றி யுள்ளார்கள். இவரை விபு என்றும் சர்வர் என்றும் ப்ரபு என்றும் வேதம் புகழ்கின்றது. இவரிடமிருந்து சங்கர் ஷனர், பிரத்யும்னர், அனிருத்ரர்; பிரம்மா முதலியோர் தோன்றி ஞர்கள். இவர் உலகங்களையும் படைத்தருளினுர்.

பிறகு பிரமதேவன் மரீசி அத்ரி அங்கிரஸ் புலஸ்தியர் க்ரது தக்ஷர் என்ற ஏழு மானஸ புதல்வர்களைப் படைத்தார். மரீசிக்குக் காசிப முனிவர் தோன்றினுர். பிரமதேவருடைய கட்டைவிரலில் தக்ஷப் பிரஜாபதி தோன்றினுர். தக்ஷப்ரஜாபதி ஐம்பது பெண்களை யுண்டு பண்ணினுர். பத்துப் பெண்களைத் தர்மதேவதைக்குக் கொடுத்தார். பதின்மூன்று பெண்களைக் காசிபருக்குத் தந்தார். இருபத்தேழு பெண்களை சந்திரருக்கு நல்கினுர். காசிபரிடமிருந்து அதிதியிடம் ஆதித்தன் முதலிய அமரர்களும், திதியிடம் தைத்யர்களும், தனு விடம் தானவர்களும், கத்ருவிடம் ஆதிசேடன் முதலிய நாகர்களும், விநதையிடம் அருணன் கருடன் முதலிய உவணர்களும், மாதங்கி யிடம் யானைகளும் பிறவும் உண்டாயின.

அந்த நாராயணர் சகலமும் படைத்து இந்த உலகத்துக்கு அதி பதியாக விளங்குகின்றுர். அந்த நாராயணரே இந்தக் கண்ணபிரானுக அவதரித்தார். இவரைத் தியானிப்பவர்கள் நித்தியத்தை யடை வார்கள். இவர் மனிதரல்லர். இவரை நீ வழிபட்டு அழிவற்ற தன்மையை யடைவாயாக" என்றுர். யுதிஷ்டிரர், "பரதகுலத் தலைவரே! திசைகளில் எந்த ரிஷிகள் இருந்து நலம் புரிகின்றுர்கள்?" என்று கேட்டார்.

பீஷ்மர் "மன்னவனே! பிரமதேவரிடம் மரீசி அத்ரி அங்கிரஸ் புலஸ்தியர் புலஹர் க்ரது வசிஷ்டர் என்ற சப்தரிஷிகள் தோன்றினுர் கள். இவர்கள் பிரமதேவருக்கு நிகரானவர்கள்.

அத்ரி முனிவருடைய புதல்வன் சந்திரன்.

சசபிந்து என்ற ஒரு சிறந்தவனுக்கு பதினுயிரம் மனைவியர்கள். இம்மனைவியரிடம் ஆயிரம் ஆயிரம் புதல்வர்கள் பிறந்தார்கள். நூறு லட்சம் புதல்வர்களாகிய இவர்களால் உலகம் வளர்ச்சியடைந்தது.

பகன் அம்சன் அர்யமா மித்ரன் வருணன் ஸவிதா தாதா விவஸ்வான் த்வஷ்டா பூஷா இந்திரன் விஷ்ணு என்ற பன்னிரண்டு ஆதித்தியர்களும் காசிபருடைய புதல்வர்கள். நாஸத்யன் தஸரன் என்ற இருவர்கள் அஸ்வனீ தேவர்கள். இவர்கள் மார்த்தாண்டன் என்ற எட்டாவது ஆதித்தனுடைய புதல்வர்கள்.

விச்வரூபன் அஜைகபாத் அஹிர்ப்புத்னியன் விருபாக்ஷன் ரைவதன் ஹரன் பஹுரூபன் திரியம்பகன் ஸாவித்ரன் ஜயந்தன் பிஞசி என்ற இவர்கள் பதினொரு உருத்திரர்கள்.

யவக்ரீதர் ரைப்யர் அர்வாவஸு பராவஸு கக்ஷீவான் ஆங்கிரஸரான பலர் கண்வர் என்ற ஏழு முனிவர்களும் உலகங்களைப் படைக்கும் பெருந்தவமுள்ளவர்கள். இவர்கள் கீழ்த்திசையில் இருக்கின்றார்கள்.

உன்முசர் விமுசர் ஸ்வஸ்த்யாத்ரேயர் ப்ரமுசர் இத்மவாஹர் த்ருடவ்ருதர் அகஸ்தியர் இந்த ஏழு முனிவரர்கள் தென்திசையில் இருக்கின்றார்கள்.

உஷங்கு, தௌம்யரான கவஷர் பரிவ்யாதர் ஏகதர் த்விதர் த்ரிதர் அதிரியின் புத்திரரான துர்வாசர் ஆகிய ஏழு மகரிஷிகள் மேல் திசையில் இருக்கின்றார்கள்.

அத்ரி, வசிஷ்டர், காசிபர் கௌதமர் பரத்வாஜர், கௌதமர் விச்வாமித்திரர் ஜமதக்கினி என்ற ஏழு மாமுனிவரர்கள் வடதிசையில் இருக்கின்றார்கள். இவர்களை வணங்குகின்றவர்கள் பாவங்களிலிருந்து விடுபடுவார்கள்'' என்று கூறினார்.

தருமர் "பிதாமகரே! திருமாலின் தீரச் செயலைக் கேட்க விரும்புகின்றேன்'' என்றார். பீஷ்மர் கூறத் தொடங்கினார்.

## வராக அவதாரம்

"முன்னொரு சமயம் வேட்டைக்குச் சென்ற யான் மார்க்கண்டேயருடைய ஆசிரமத்தில் இருந்தேன். அங்கு ஆயிரக் கணக்காக அமர்ந்திருந்த முனிவர்களைக் கண்டேன். அவர்கள் எனக்கு *மதுவர்க்க முதலிய தந்து உபசரித்தார்கள். அப்போது காசிப முனிவர் திருமாலின் தீரச்செயலைக் கூறினார்.

---

*மதுவர்க்கம்—தேன் முதலியவற்றால் செய்த குடிநீர்.

இரணியாட்சன் என்ற கொடிய அசுரன் நரகன் முதலிய அசுரர் களுடன் கூடி தேவர்கள்மீது பொறுமை கொண்டான், கோபலோபங் களுடன் கூடி தேவர்களை அடக்கினன். ஒரு லட்சம் ஆண்டுகள் காற்றைப் புசித்துக் கொண்டு கடுந்தவஞ் செய்து பிரமதேவரிடம் ஆயிரக் கணக்கான வரங்களைப் பெற்ருன்.

வரவலிமையால் அமரர்களுக்கு நிரம்ப இடுக்கண்கள் பல வழியி லும் புரிந்தான். பூமியைக் கடலில் அமுத்தினன். அதனல் மக்கள் அவதியுற்றுர்கள். தேவர்கள் பிரமதேவர் ஆலோசனைப்படி மிகச் சிறந்த அகத்திய முனிவரை வேண்டிக் கொண்டார்கள். அகத்திய முனிவர் தனது அளவற்ற தவவலிமையால் கடல்நீரை ஒரு கரத்தால் அள்ளிப் பருகிவிட்டார். கடல் வற்றியது.

அப்போது திருமால் மிகவும் அச்சத்தைத் தருகின்றதும் மந்தர மலை போன்றும் பெரியவராக வடிவங் கொண்டு நின்றுர். அசுரர்கள் அதனைக்கண்டு அஞ்சாமல் அலட்சியஞ் செய்து நாற்புறங்களிலும் சூழ்ந்து பிடித்து இழுத்தார்கள். வராகமூர்த்தி ஒரு ஊங்காரஞ் செய்தார். அந்த ஓசை பதினலு உலகங்களையும் நடுங்க வைத்தது. திசைகள் பத்தும் செவிடுபட்டன. அசுரர்கள் மூர்ச்சித்தார்கள். அமரர்கள் திருமாலைத் துதி செய்து போற்றினர்கள். வராகமூர்த்தி அசுரர்களையும் இரண்யாட்சனையும் வதை செய்தார். பூமியைத் தனது கொம்பிலே பந்துபோல் எடுத்துக்கொண்டு வந்தார்.

நாரதமுனிவர் பிராணவாயுவை அடக்கிக்கொண்டு இமாசலத் தில் 100 தேவ வருடம் தவம் புரிந்தார். அப்போது வானத்தில் ஒரு பேரொலி யுண்டாயிற்று. நாரதர் பரபரப்பையடைந்து "யார் நீ" என்று கேட்டார். "நான் மிகப் பெரிய *அனந்தன்" மூடர்கள் என்னை அறியமாட்டார்கள். ஞானிகள் அறிவார்கள்" என்று திருமால் கூறினர்.

நாரதர் "பெருமாளே! உமது வடிவம் எனக்குத் தெரியவில்லை. உமது உண்மையைஎனக்கு உபதேசிக்க வேண்டும்" என்று சொன்னர். "நாரத! எனக்கு வாய் கண் நாசி முதலியன இல்லை. ஞானம் தன் னுலேயே என்னை அறிய முடியும்" என்று கூறினர். பிறகு ஒரு ஒலியும் உண்டாகவில்லை. "நான் மிகப் பெரியவன்; அனந்தன்" என்ற சொல் கேட்கப்பட்டதே? அனந்தன் யார்?" என்று நாரதர் சந்தேகங் கொண்டார். நாரதர் இந்தப் பூமியிலிருந்து எல்லாம் தோன்று கின்றன; தோன்றியவை பூமியில் ஒடுங்குகின்றன. ஆகவே பூமியே அனந்தையாக இருக்கக்கூடும் என்று கருதினர்.

---

* அனந்தன்—முடிவில்லாதவன்

பூமியை வணங்கினுர். "ஏ பூதேவியே! உனக்கு வணக்கம். நீ பெரியவள், அனந்தை. உன்னை நான் தெரிந்துகொள்ள விரும்புகின்றேன்" என்ருர்.

பூமிதேவி புன்னகை புரிந்து "யாழ் வல்லோரே! நான் பெரியவளுமல்லேன்; அனந்தையுமல்லேன்; எனக்குக் காரணமான கந்தரூபத்தைக் கேளும்" என்ருள்.

நாரதர் கந்தம் என்ற தத்துவத்தை வணங்கி "நீ அனந்தனு?" என்று வினவினுர். கந்த தத்துவம் "எனக்கும் காரணமான நீர் என்னையும் விடப்பெரிது" என்று சொல்லிற்று. நாரதர் கடலிடம் சென்று வணங்கி "நீ மிகப் பெரிதாக பரந்து விரிந்து காட்சிதருகின்ருய். நீதான் அனந்தன்' என்ருர். நதிபதியான சமுத்திரம் "நான் அனந்தனல்லன்; எனக்குக் காரண ரஸம் மிகவும் பெரிது" என்றது. நாரதர் ரஸ தத்துவத்தை வணங்கி "ரஸமே! நீ அனந்தன். உன்னை அறிய விரும்புகின்றேன்" என்ருர். ரஸம் என்ற தத்துவம் "பிரம புத்திரரே! நான் அனந்தனல்லன். எனக்குக் காரணமாக அக்கினியைக் கேளும்" என்று கூறியது.

நாரதமுனிவர் அக்கினியை வணங்கினுர். "யாக வடிவாக விளங்கும் அக்கினியே! உனக்கு வணக்கம். நீர் மிகப் பெயவர். நீர் அனந்தர். உம்மையும் உமது வடிவையும் அறிய ஆவல் கொண்டிருக்கின்றேன்" என்ருர்; அக்கினிபகவான் சிரித்துக்கொண்டு, "முனிவரரே! நான் பெரியவனுமல்லன்; அனந்தனுமல்லன்; எனக்குக் காரணமான ரூபம் என்ற தத்துவத்தைக் கேளும்" என்றது. நாரதர், "ஏ ரூபமே! நீயே அனந்தன்; மிகவும் பெரியவன்" என்ருர். ரூபதத்துவமானது நகை செய்து "வாயு எனக்குக் காரணமாயுளது, அதைக் கேளும்" என்று சொல்லிற்று.

சிறந்த யோகியாகிய நாரதர் வாயுவை வணங்கி, பேராற்றல் படைத்த வாயுவே! நீ மிகவும் பெரியவன். நீ அனந்தன்" என்ருர். வாயு "முனிவரே' எனக்குக் காரணமான பரிசாத்மாவைக் கேளும்" என்றது. நாரதர் பரிசத்தை வணங்கி "நீயே அனந்தன்; மிகப் பெரியவன்" என்ருர். பரிசமானது நான் அனந்தனல்லேன்; எனக்குக் காரணமாகவுள்ள ஆகாயத்தைக் கேளும்" என்றது. நாரதர் ஆகாயத்தை வணங்கி நீ எங்கும் நிறைந்திருக்கின்ருய். நீ மிகவும் பெரியவன்; அனந்தன்" என்ருர். ஆகாயம் "நான் அனந்தனல்லேன்; எனக்குக் காரணமான சப்தத்தைக் கேளும்" என்றது.

எல்லா வேதங்கலின் மூலமாகிய சப்தத்தை வணங்கி "ஏ சப்தமே! நீயே பெரியவன்; அனந்தன். உன் வடிவை யறிய விரும்பு

கின்றேன் " என்றார். சப்தம் " தபோதனரே ! நான் அனந்தனல்லேன்; எனக்குக் காரணர் பிரம்ம தேவர். அவரே பெரியவர். நான் அவருக்கு அடங்கியிருப்பவன் " என்று சொல்லிற்று.

நாரதர், எல்லா முனிவர்களாலும் சூழப்பட்டவரும் இரண்ய கர்ப்பருமாகிய பிரமதேவரை வணங்கி " நீர் மிகப் பெரியவர்; அனந்தர். உம்மைத் தெரிந்து கொள்ள விரும்புகின்றேன் " என்றார்.

பிரம்மதேவர் "நாரதா: நான் மிகப் பெரியவனுமல்லேன். அனந்தனுமல் லேன். நந்தகோபன் இல்லத்தில் ஆயர் சிறுவர்கள் சூழ கோபாலராய் வணங்கும் அப் பரம் பொருளே மிகப் பெரியவர். அவரே அனந்தர். அவர் உலகங்களைப் படைத்துங் காத்தும் ஒடுக்கியும் முத் தொழிலும் புரிகின்றார். அளக்க முடியாத பெருமையுடையவர்" என்று கூறினார்.

நாரதர் பிரம்மலோகத்தை விட்டு மதுரைக்கு அருகிலுள்ள ஆயர்பாடிக்குச் சென்றார். அங்கே நந்தகோபாலனுடைய இல்லத்தில் சிறுவர்களுக்குரிய விளையாட்டில் இருப்பவரும், கன்றுக் கூட்டங்களால் அலங்கரிக்கப் பட்டவரும், கன்று ஊட்டியபின் கட்டுகின்றவரும்! புழுதி படிந்த முகம் உள்ளவரும், வேணுகானம் புரிகின்றவருமான பகவன் கிருஷ்ணரைக் கண்டு வணங்கினார்.

"நீரே மிகப்பெரியவர்; நீர் அனந்தர்; அழிவில்லாதவராக இருக்கின்றீர். உம்மைத் தெரிந்து கொள்ள விரும்புகின்றேன்."

கண்ணபிரான் புன்னகை புரிந்து, "நாரத ! என்னைவிடச் சிறந்தது ஒன்றுமில்லை: எல்லாம் என்னிடத்தில் நிலை பெற்றிருக்கின்றன. என்னைவிடப் பெரிய பொருளுமில்லை. நானே மிகப் பெரியவன்; நான் அனந்தன்; நான் முன் விண்ணிலிருந்து உனக்குச் சொன்னேன். ஒரு மனிதனும் என்னை அறிகின்றாரில்லை. என் மாயையிலிருந்து மீள்வது அரிது. நீ எனக்கு அன்பான பக்தன். நீ என்னுடைய உண்மையையுணர். உனக்கு உண்மை ஞானத்தை உதவுகின்றேன் " என்றார்.

" நாரதர் அவரது அருள் பெற்றுத் திரும்பினார். பார்த்தனே ! இந்தப் பரமாத்மாவின் பெருமையை உனக்குப் பகர்ந்தேன். நீ இவரைச் சரணம் அடைந்து நலம் பெறுவாய் " என்றார்.

## மந்திர உபதேசம்

தருமர், " பிதாமகரே ! ஜபத்துக்கு உரிய மந்திரம் எது ? மரண காலத்தில் எதை நினைப்பவன் உத்தமகதியைப் பெறுவான். இதனை நீர் எனக்கு உபதேசம் புரிவீராக " என்று கேட்டார்.

பீஷ்மர் "குற்றமற்றவனே ! இது உத்தமமானது. நாரதர் நாராயணரைப் பணிந்து " எம்பெருமானே ! அச்சுதரே ! காலை மாலையும் மற்ற நேரங்களிலும் எதை ஜபிக்கவேண்டும் ? உயிர் போகும் போது எதை நினைக்க வேண்டும்" எனக்கு உபதேசித்தருளும்" என்று கேட்டார்.

" நாரத ! இது பரமரகசியமானது. என்னுடைய துவாதச அட்சரங்களாகிய மகா மந்திரத்தை உனக்கு உபதேசிக்கின்றேன். இதனைச் செபிக்கின்றவன் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபட்டு நாராயண வடிவைப் பெறுகின்றான்.

" ஓம் நமோ பகவதே வாசுதேவாய "

இந்த மகாமந்திரத்தை ஒருமைப்பட்ட மனத்துடன் ஜபிக்க வேண்டும் " என்றார்.

நாரதர் விஷ்ணுவைத் துதி செய்யலானார்.

" புருஷோத்தமரும், உலக நாதரும், பரமபத ரூபியுமான ஸ்ரீ ஹரியை அஞ்சலி செய்கின்றேன். புராதனரும், ஆயிரம் கண்களும், ஆயிரம் முகங்களும், ஆயிரம் பாதங்களும் உடையவரும் ஆதியந்த மில்லாதவரும், அபயமளிப்பவரும், அசைவற்றவருமாகிய பெருமானைச் சரணமடைகின்றேன். வரமளிப்பவரே ! யாகரூபியே ! எல்லாம் ஆனவரே ! எல்லாவற்றுக்கும் இருப்பிடமானவரே ! உமக்கு வணக்கம். எங்கும் நிறைந்தவரே ! ஞானிகளால் அறியத்தக்கவரே ! நின்றாலும் சென்றாலும், நடந்தாலும் கிடந்தாலும், துயின்றாலும் அயின்றாலும், நான் எப்போதும் உம்மையே நினைப்பேன். எனக்கு மீண்டும் பிறவி வேண்டாம். இந்த உடம்பு நுகரத்தக்க நோய்கள் வரக்கடவன. அவைகளை நுகர்ந்துமுடிப்பேன்; நாராயணமூர்த்தியே ! நான் உன்னை அடைய விரும்புகின்றேன்" என்று கூறிப் பலப்பல விதமாகத்துதி செய்தார்.

திருமால் நாரதருக்கு அருள்புரிந்து "ஓம் நமோ பகவதே தஸ்மை தேஹிநாம் பரமாத்மநே ; நாராயணாய பக்தாணும் ஏகநிஷ்டாய சாச்வதே " என்ற மகாமனுவையும் உபதேசித் தருளினார். நீ சோம்பலின்றி என்னையே தியானஞ்செய்; ...ஓம் நமோ நாராயணாய ' என்ற எட்டட்சரத்தையும் நினை. என்னை அடைந்தவன் எல்லா நலன்களையும் பெறுகின்றான். பத்துலட்சம் அஸ்வமேத யாகங்களைச் செய்தவனும் அடைய முடியாத நற்கதியை என்னை எண்ணுகின்றவர்கள் எளிதில் அடைவர். பக்தியுடன்என்னை நினைப்பவர் சித்தியும் முத்தியும் பெறுவர் " என்றார்.

நாரதர் பத்து ஆண்டுகள் வேறு சிந்தையின்றி தியானம் புரிந்து கொண்டிருந்தார் " என்று கூறினார்.

## கருடனுடைய வரலாறு

பீஷ்மர் "அரசனே! நான் முன்னொரு சமயம் கங்கை நதிக்கரையில் பத்து ஆண்டுகள் திருமாலைத் துதி செய்துகொண்டு யாகஞ் செய்தேன். அப்போது என் அன்னையாகிய கங்கை என்னைக் காக்கும் பொருட்டு என் அருகில் அமர்ந்து கொண்டிருந்தாள். அப்போது, மேருமலை போன்றவரும், மந்தரமலைக்கு நிகரானவரும், பறவைகளின் பதியுமாகிய கருடபகவான் அங்கு வந்தார். அவரை நான் வரவேற்று பலவித உபசாரஞ் செய்து வணங்கினேன். அவர் என் அருகில் அமர்ந்தார்.

"விநதையின் குமாரரே! யாராலும் அறிய வொண்ணாத நாராயணரை நீர் தாங்கும் பெரும்பாக்கியத்தைப் பெற்றிருக்கின்றீர்; உலகங்களை அவர் தாங்குகின்றார். அவரை நீர் தாங்கிவருகின்றீர், அவருடைய தத்துவத்தை எனக்கு உபதேசிக்க வேண்டும் என்று கேட்டேன். அவர் கூறுவாராயினர்.

தாயின் அடிமைத் தன்மையை விலக்கும் பொருட்டு அமுதத்தைக் கவர்ந்து வந்தேன். அப்போது என்முன் தோன்றி "உன் ஆற்றலைக் கண்டு மகிழ்கின்றேன். நல்லது! நல்லது! பறவை வேந்தனே! உனக்கு வரந்தருகின்றேன். பெற்றுக்கொள்" என்றார் திருமால்: அறிவற்ற நான் கர்வத்துடன் நீர் என்னிடம் வரத்தைக் கேட்டுப் பெற்றுக்கொள்ளும் என்றேன். திருமால் "நீ இன்று முதல் எனக்கு வாகனமாக இரு. இது உன்னிடம் பெற்றுக் கொண்டவரம்" என்றார். நான் அவரைப் பார்த்து "நான் உமக்கு மேலே இருக்க வேண்டும்" என்று வரங்கேட்டேன். அவர் என்னைக் கொடியாகக் கொண்டார்.

அவர் என் தோளில் அமர்ந்தருளினர். ஆயிரம் ஆயிரம் கண்களும் தலைகளும் திருவடிகளும் உடையவர் கோடி சூரிய ஒளியுடன் காட்சி தந்தார். நான் அவரைப் பின் தொடர்ந்து சென்றேன். பாற்கடலின் வடபுறத்தில் வைகர்ணம் என்ற ஆலயத்துக்குச் சென்றேன். நவரத்னங்களால் அலங்கரிக்கப்பட்ட அங்கு நானாவித வேத ஒலிகளும் வாத்திய ஒலிகளும் கேட்டன. ஆயிரம் பணமகுடங்களையுடைய ஆதிசேடன்மீது நீலமலை போல் விளங்கினர் திருமால்.

அங்கே பிரமா முதலியவர்களும், திசை பாலகர்களும் துதி செய்து கொண்டிருந்தார்கள். நான் அங்கே வணங்கி நின்றேன்.

நாராயணர், "கருடா! வா" என்று கூறிவிட்டு வட கிழக்கு வழியாகச் சென்றார். அவர் மெல்லவே சென்றார். நான் பதினாயிரம் லட்சம் கோடி யோசனை தூரம் அவர் பிறகு பறந்து சென்று களைத்

துப் போனேன். "தேவரே! நான் பக்தன் துன்பப்படுகின்றேன்" என்றேன். "கருடனே! வா" என்ருர் அவர். நான் நூறுகோடி யோசனை பறந்து சென்றேன். ஒரு பயங்கரமான இடத்தை யடைந்தேன். அங்கே இருள் வடிவங்களுடனும், மலை போன்றவைகளுமான பூதங்களைப் பார்த்தேன். நான் அஞ்சி நடுங்கினேன். ஒரு கிங்கரன் நூறு யோசனை நீளமுள்ள என்னைக் கையில் எடுத்து அவ்விடத்திலிருந்து மண்ணுங்கட்டியைப் போல வீசி எறிந்தான். நான் அப்போது இருளைவிட்டு விலகி ஆகாயத்தை யடைந்தேன். அங்கு இடியோசையைப் போல ஒரு ஊங்கார வோசையைக் கேட்டேன். பல பூதங்கள் என்னைச் சூழ்ந்து கொண்டன.

"தாமரைக் கணணரே! என்னைக் காப்பாற்றும்" என்றேன். பயங்கரனுன ஒருவன் என்னை எடுத்து ஒரு குகையின் துவாரத்தில் எறிந்தான். ஒரு கணத்தில் அக்கினியை விலகி வாயுமண்டலத்தை யடைந்தேன். என்னை எடுத்தெறிய ஒருவன் நெருங்கினுன். நான் துக்கத்துடன் கதறிக்கொண்டு நின்றேன். அவன் என்னைத் தூக்கி எறிந்தான். அங்கு ஆயிரம் சூரியர்களுக்கு ஒப்பான பல கருடர்களைப் பார்த்தேன். அவர்கள் என்னைப் பார்த்துச் சிரித்தார்கள்" அற்ப ஆயுளுள்ளதும் மிகப் பலவீனமுள்ளதுமான இந்தப் பட்சி இங்கே வந்திருக்கின்றதே" என்று கூறினுர்கள். அங்கே ஆயிரம் யோசனை நீளமுள்ளவரும், ஆயிரம் சூரிய ஒளியுள்ளவரும் ஆன ஆயிரம் கருடர்களின் மீது ஏறிக் கொண்டவருமான நாராயணனைப் பார்த்தேன்.

(தொடரும்)

## வரப் பெற்றேம்

1. அத்வைதம் (வெளியீடு எண் 245)

2. சிவஞான போத சிந்தனைக் கொத்து (வெளியீடு எண் 246)

இவை யிரண்டும் திருவாவடுதுறை ஆதீனத்தாரால் வெளியிடப் பெற்றவை; விலை குறிக்கப்படவில்லை (அவர்கட்கு நேரில் எழுதிப் பெற வேண்டும், விலாசம்;

**திருவாவடு துறை ஆதீனம்**

திருவாவடுதுறை, தஞ்சாவூர் ஜில்லா.

3, தவத்திரு. பன்றிமலை அடிகளார் அடியார்கள் திருக் கூட்டச் சிறப்புமலர் தமிழிலும், தெலுங்கிலும். ஆங்கிலத்திலும் பல அடியார்கள் எழுதிய கட்டுரைகள் அடங்கியது. விலை ரூ. 2—00

கிடைக்குமிடம் :

**ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சுவாமிகள் மிஷன்**

17/21 நுங்கம்பாக்கம் ஐரோடு, சென்னை 34.

4. திருக்கயிலை. தெய்வீக மாதப் பத்திரிகை. சமயப்பொருள், இலக்கணம், இலக்கியம முதலியவற்றுடன் தெளிவான கட்டுரைகளைக் கொண்டது. ஆண்டுச் சந்தா ரூ.5—00

வெளியிடுபவர் :

**K. Y. சுந்தரேசக் குருக்கள்**

ஆசிரியர், திருக்கயிலை,

96, சோலையப்ப முதலியார் தெரு,

கும்பகோணம்.

---